# ஸுவர்ணமாலா ஸ்துதி

(‘அ’ விலிருந்து ‘க்ஷ’ வரை உள்ள அக்ஷரங்களை வரிசைக்கிரமமாக ச்லோகங்களின் முதலெழுத்தாக வைத்து செய்த துதியாதலால் “ஸுவர்ணமாலா” எனப்பட்டது.)

**அத2 கத2மபி மத்3ரஸநாம் த்வத்3கு4ண**
**லேசைர் விசோத4யாமி விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 1

எங்கும் நிறைந்த பரமேச்வரா! மிகவும் சிரமப்பட்டு உன் குணங்களில் கொஞ்சம் சொல்லுவதால் என் நாக்கை தூய்மைப்படுத்திக் கொள்கிறேன். அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே, சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஆக2ண்ட3ல மத3 க3ண்ட3ந பண்டி3த**
**தண்டு3 ப்ரிய சண்டீ3ச விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ3 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 2

இந்திரனின் கர்வத்தை அடக்குவதில் ஸமர்த்தரும், (தாண்டவத்தை உண்டாக்கிய) தண்டுவுக்குப் பிரியமானவரும், சண்டி தேவிக்குக் கணவருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே,! சங்கரனே ! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**இப4சர்மாம்ப3ர சம்ப3ர ரிபுவபு:**
**அபஹரணோஜ்ஜ்வல் நயந விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 3

யானைத்தோலை ஆடையாய்க் கொண்டவரும், மன்மதன் உடலை எரித்த அக்னிக் கண்ணையுடைய வருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே சம்புவே, சங்கரனே உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஈச கி3ரீச நரேச பரேச**
**மஹேச பி3லேசய பூஷண போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 4

ஈச்வரன், மலைக்கு ஈச்வரன், மனிதர்க்கு ஈச்வரன், எல்லாவற்றிற்கும் மேம்பட்ட பரேச, மஹேச! (புற்றில் வசிக்கும்) பாம்பை அணிகலனாய்க் கொண்ட ஏ பரமேச்வரா, அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே சம்புவே, சங்கரனே உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**உமயா தி3வ்ய ஸுமங்க3ள விக்3ரஹ -**
**யாலிங்கி3த வாமாங்க3 விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 5

ஒளிபொருந்திய மங்களமான உடலோடு கூடிய உமாதேவியால் இடப் பாகத்தில் தழுவப்பெற்ற ஏ பரமேச்வரா ! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஊரீ குரு மாமஜ்ஞ மநாத2ம்**
**தூ3ரீ குரு மே து3ரிதம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 6

ஒன்றும் தெரியாதவனும், கதியற்றவனுமான என்னை ஏற்றுக்கொண்டு என் பாபங்களைத் துரத்துவாய் ஏ! பசமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ரிஷிவர மாநஸ ஹம்ஸ சராசர**
**ஜநநஸ்தி2திலய காரண போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 7

உயர்ந்த ரிஷிகளின் மனதிற்கு ஹம்ஸமாய் விளங்குகிறவரும், அசைவதும் அசையாததுமான வஸ்துக்களுக்கு பிறப்பு, வளர்ப்பு, அழிவு இவற்றின் காரணருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ரூக்ஷாதீ4ச கிரீட மஹோக்ஷா -**
**ரூட4 வித்4ருத ருத்3ராக்ஷ விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 8

நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனைக் கிரீடமாகக் கொண்டவரும், பெரிய காளைமாட்டை வாகனமாய்க் கொண்டவரும் ருத்ராக்ஷம் பூண்டவரும் எங்கும் நிறைந்தவருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப,

ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ல்ருவர்ணத்3 வந்த்3வ மவ்ருந்த ஸுகுஸுமமி**
**- வாங்க்4ரௌ தவார்ப்பயாமி விபோ4**
**ஸாம்ப4 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 9

என் இரண்டு கண்களாகிற காம்பற்ற மலர்களை உன் திருவடிகளில் அர்ப்பணம் செய்கிறேன். ஏ பரமேச்வரா! நீயே எனக்குச் சரணம். அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஏகம் ஸதி3தி ச்ருத்யா த்வமேவ**
**ஸத2ஸீத்யுபாஸ்மஹே ம்ருட3 போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 10

ஒன்றே ஸத்யம் எனும் வேதவாக்யத்தால் நீயே அந்த சத்யமாக இருக்கிறாய் என்று உபாஸிக்கிறேன். ம்ருட (இரண்டும் அளிக்கும்) பரமேச்வர, அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

குறிப்பு: - இந்த கவி வாக்யம் விப்ரர்கள், ஒரே பரம் பொருளையே பலவாய்ச் சொல்லுகிறார்கள். இதனால் அத்வைத சாஸ்திர பரம்பொருள் சிவனே என ஆசார்யாள் நிரூபிக்கிறார்கள்.

**ஐக்யம் நிஜப4க்தேப்4யோ விதரஸி**
**விச்வம் ப4ரோsத்ர ஸாக்ஷீபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 11

உன்னைத்தொழும் பக்தர்களுக்கு உன்னோடு ஐக்யத்தை அருள்புரிகிறாய். எல்லா உலகையும் தாங்குகிறாய், இங்கு (எல்லாவற்றிலும்) சாக்ஷியாக இருக்கிறாய். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே; உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

குறிப்பு: - ஆச்சரியமாயும், பலவாய் உண்டாவதும் இருப்பதும் ஆன இவ்வுலகு எல்லாம் ருத்ரனே, அந்த ஈச்வரனுக்கு நமஸ்காரம் இந்த வேத வாக்யமே, இந்த சுலோகத்தில் மூலமாய்க் கொள்ளலாம்.

**ஓமிதி தவ நிர்தே3ஷ்ட்ரீ மாயா -**
**ஸ்மாகம் ம்ருடோ3பகர்த்ரீ போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 12

'ஓம்' எனும் இந்த எழுத்தானது உன்னையே மாயையைத் தாண்டிய பரம்பொருளாய்க் குறிக்கிறது, ம்ருடனான உன்னைத் தெரிந்துகொள்ள எனக்கும் மிகவும் உதவியாயிருக்கிறது. ஏ! பரமேச்வரா, அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்கும் புகலாக இருக்கட்டும்.

**ஔதா3ஸ்யம் ஸ்புடயதி விஷயேஷ**
**தி3க3ம்ப3ரதா ச தவைவ விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 13

நீ திக்குகளை ஆடையாய்க் கொண்டிருப்பது உலக விஷயங்களில் உனக்குள்ள பற்றின்மையையே காட்டுகிறது. ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**அந்த: கரண விசுத்3தி4ம் ப4க்திம்**
**ச த்வயி ஸதீம் ப்ரதே3ஹி விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 14

உள்ளேயிருப்பதான மனதிற்குத் தூய்மையும், உன்னிடத்தில் நிலைத்திருக்கும் படியான பக்தியையும் கொடுக்கவேண்டுகிறேன். ஏ பரமேச்வரா? அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**அஸ்தோபாதி4 ஸமஸ்தவ்யஸ்தை**
**ரூபைர்ஜக2 ந்மயோऽஸி விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 15

தடையற்ற மொத்த முழுப் பொருளும் தனித்தனியானதுமான உன் உருவங்களால் சிவமயமான நீ எல்லா உலகமாயிருக்கிறாய்! ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**கருணாவருணாலய மயி தா3ஸ**
**உதா3ஸஸ் தவோசிதோ ந ஹி போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 16

கருணைக்கடலே! உன் வேலைக்காரனான என்னிடத்தில் பாராமுகம் காட்டுவது உசிதமல்ல! எ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதா சிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**க2ல ஸஹவாஸம் விக4டய க4டய ஸ**
**தாமேவ ஸங்க3மநிசம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 17

கெட்டவர்களோடு சேர்க்கையைத் தடுத்து நல்லவர்களுடன் எப்போதும் கூடும்படி செய்! ஏ பரமேச்வரா! அம்பாளுடன் கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**க3ரளம் ஜக3து3பக்ருதயே கி3லிதம்**
**ப4வதா ஸமோ஽ஸ்தி கோ஽த்ர விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 18

உலகிற்கு உதவி செய்வதற்காக (பாற்கடலில் அமுதம் கடையும் பொழு துண்டான) விஷத்தை உண்ட உனக்கு நிகர் உலகில் ஒருவருமில்லை. ஏ பரமேச் வரா! அம்பாளுடன் கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**க4னஸார கௌ3ர கா3த்ர ப்ரசுர**
**ஜடாஜூடபத்3த4 க3ங்க3 விபோ**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 19

கற்பூரம் போல் வெளுத்த உடலை உடையவரே! மிகப் பெரியதான ஜடை வைத்துள்ள ஏ பரமேச்வரா! அம்பாளுடன் கூடிய ஸாம்ப ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஜ்ஞப்தி: ஸர்வ சரீரேஷ்வக2ண்டி3தா**
**யா விபா4தி ஸா த்வம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 20

எல்லா சரீரங்களிலும் பிரிவுபடாத அறிவாக விளங்குகிற சக்தியாகிய பரம்பொருள் நீயே. ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதா சிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**குறிப்பு: -** எவனால் இந்த எல்லாம் நிறைந்து காணப்படுகிறதோ, அவனே ஆத்மா, என்று சுருதி சொல்லுகிறது. இந்த சுலோகத்திற்கு. இது பிரமாணமாய் ஆகலாம்.

**சபலம் மம ஹ்ருத3ய கபிம் விஷய**
**த்3ருசரம் தருட4ம் ப3தா4ன விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** **21**

என் மனதாகிற குரங்கு உலக விஷயங்களில் அலைகிறது. இதை நிலை நிறுத்த வேண்டுகிறேன். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதா சிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**சா2யா ஸ்தா2ணோரபி தவ தாபம்**
**நமதாம் ஹரத்யஹோ சிவ போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** **22**

விந்தை! ஸ்தாணு (பட்டுப் போன மரம்) என்று பெயர் பெற்ற போதிலும் உன் நிழல் பட்ட மாத்திரத்தில் வணங்குகிறவர்களின் தாபங்களை போக்கடிக்கிற ஏ சிவ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஜய கைலாஸ நிவாஸ ப்ரமத2**
**க3ணாதீ4ச பூ4ஸுரார்சித போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** **23**

கைலையங்கிரியில் வாழ்பவரும் ப்ரமதகணங்களின் தலைவரும் அந்தணர்களால் பூஜிக்கப்பட்டவருமான ஏ பரமேச்வரா! வெல்க! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஜ2ணுதக ஜ2ங்கிணு ஜ2ணுகத் கி டதக**
**சப்3தை3ர் நடஸி மஹாநட போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** **24**

ஜணு, தக, ஜங்கிணு. ஜணு, தத்கிட, தக என்ற ஒலியுடன் நடனம் புரியும் பெரிய நடனான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஜ்ஞானம் விக்ஷேபாவ்ருதிரஹிதம்**
**குரு மே கு3ருஸ்த்வமேவ விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 25

நீயே (தக்ஷிணாமூர்த்தி), குரு உருவாயிருந்து இருப்பதை மறைப்பது. இல்லாததைத் தோற்று விட்டதுமான சக்தியின் செயல் நீங்கிய ஞானத்தை எனக்கு அருள்புரிவாய் ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**குறிப்பு: -** ஆவ்நதி - உள்ளதை மறைப்பது; விக்ஷேப சக்தி - இல்லாததை இருப்பது போல் காட்டுவது; ஞானம் - பரம்பொருளை அறியும் அறிவு.

**டங்காரஸ்தவ த4னுஷோ த3லயதி**
**ஹ்ருத3யம் த்3விஷாமசநிரிவ போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 26

உன் (பிநாகம் எனும்) வில்லின் நாண் ஓசை, கேட்ட மாத்திரத்திலேயே இடியோசை போல் பகைவர்கள் மனத்தை பிளக்கிறது. ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**டா2க்ருதிரிவ தவ மாயா ப3ஹி:**
**அந்த: சூந்ய ரூபிணீ க2லு போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 27

பூஜ்யத்தைப் போல உள்ளும், வெளியும் இல்லாத ஒன்றல்லவோ உன் வசமுள்ள மாயை. ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**குறிப்பு: -** மாயையை ப்ரக்ருதியாகவும் அதை தன் வசம் கொண்டவன் மாயீ என்றும் சுருதி சொல்லுகிறது.

**ட3ம்பரமம்பு3 ருஹாமபி த3லயதி**
**அநக4ம் த்வதங்க்4ரி யுக3லம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 28

செந்தாமரையின் புகழையும் தோற்கடிப்பன உன் மாசற்ற திருவடிகள். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே, உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ட4க்காக்ஷஸூத்ர சூல த்3ருஹிணக -**
**ரோட ஸமுல்லஸத்கர போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 29

உடுக்கை, ஜபமாலை, சூலம், பிரம்மகபாலம் இவைகளைக் கையில் கொண்ட ஏ பரமேச்வரா! அம்பளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ணாகார க3ர்பி4ணீ சேச்சு2ப4தா3**
**தே சரக3திர் ந்ருணாமிஹ போ**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 30

'ந' என்ற எழுத்தின் வடிவைக் கொண்ட உன் அம்புப் பெட்டியில் உள்ள அம்பானது (எங்களை நோக்கி) வெளியில் வராத வரை மனிதர்களுக்கு நன்மையே செய்யும். ஏ பரமேச்வரா ! நீயே எனக்குச் சரணம். அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**தவ மந்வதி ஸஞ்ஜபத: ஸத்3ய:**
**தரதி நரோ ஹி ப4வாப்3தி4ம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 31

உன் திருமந்திரமான ஐந்தெழுத்தை மிகுதியாக ஜபம் செய்கிறவன் உடனேயே பிறவிக்கடலை கடக்கிறான். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே, சம்புவே, சங்கரனே, உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**தூ2த்காரஸ்தஸ்ய முகே பூ4யாத்**
**தே நாம நாஸ்தி யஸ்ய விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 32

எவன் உன் நாமத்தை சொல்லவில்லையோ, ஜனங்கள் அவனைத் 'தூ' என்று சொல்லட்டும். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப. சிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**த3யேநீயஸ்ச த3யாலு: கோSஸ்தி மத்**
**அந்யஸ் த்வத3னய இஹ வத3 போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 33

இங்கு தயை வேண்டுபவனும் தயை உடையவனும் முறையே என்னையும் உன்னையும் தவிர வேறு யார்? சொல். ஏ. பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**த4ர்மஸ்தா2பந்த3க்ஷ த்ர்யக்ஷ கு3ரோ**
**த3க்ஷயஜ்ஞ சிக்ஷக போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 34

தருமத்தை நிலைநாட்டுவதில் வல்லவரும். முக்கண்ணரும், குருவின் உருவானவரும், தக்ஷனின் யாகத்தை அழித்தவருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**நநு தாடி3தோSஸி த4னுஷா லுப்3த4தி4யா**
**த்வம் புரா நரேண விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 35

வேடனாய் வந்த உன்னை மனிதன் (அர்ஜுனன்) முன்பு பேராசை கொண்டு வில்லால் அடித்தான் அன்றோ! ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**பரிமாதும் தவ ரூர்த்திம் நாலம்**
**அஜஸ்தத்பராத்பரோsஸி விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 36

(லிங்க) மூர்த்தியான உன்னை அளக்க பிரும்மாவாலும், விஷ்ணுவாலும் கூட முடியவில்லை. அப்பாலுக்கு அப்பாலான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ப$^{2}$லமிஹ  ந்ருதயா ஜனுஷஸ்த்வத்பத$^{3}$**
**ஸேவா ஸநாதநேச விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 37

உன் திருவடித் தொண்டில் ஈடுபட்ட மனிதனுக்கு அவன் மனிதனாக இருக்கிற காரணத்தால் தான் இங்கேயே எல்லாவற்றையும் கொடுத்து அருள் புரிகிறாய். ஏ ஆதி ஈசனான பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதா சிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ப$^{3}$லமாரோ$^{3}$க்யம் சாயுஸ்த்வத்$^{3}$கு$^{3}$ண**
**ருசிதாம் சிரம் ப்ரதே$^{3}$ஹி விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 38

பலம், நோயற்ற தன்மை, ஆயுள், உன் குணங்களில் இன்புறுதல், இவைகளை வெகுகாலம் எனக்கு நன்கு கொடுத்தருள்வாய். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ப$^{4}$க$^{3}$வன் ப$^{4}$ர்க$^{3}$ ப$^{4}$யாபஹ பூ$^{4}$தபதே**
**பூ$^{4}$திபூ$^{4}$ஷிதாங்க$^{3}$ விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 39

பர்க்கன் (சூரியன்) எனப் பெயர் பெற்ற இறைவனே, அச்சத்தைப் போக் கடிப்பவனே, பூதங்களுக்குத் தலைவனே, உடல் முழுதும் விபூதியைப் பூசியவனே, ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**மஹிமா தவ நஹி மாதி ச்ருதிஷ ஹி**
**மாநீத4 ராத்மஜாத3வ போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 40

பனிமலையின் புதல்வியான உமையின் கணவரே, வேதங்களில் கூட உன் மஹிமை முழுதும் அளக்கப்படவில்லை. ஏ பரமேசவரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**யம நியமாதி3பி4ரங்கை3ர்யமிநோ**
**ஹ்ருத3யே ப4ஜந்தி ஸ த்வம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 41

யமம், நியமம், ஆஸனம் ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி முதலிய (எட்டு) அங்கங்களால் யோகம் செய்து உன்னை மனதில் காணுபவரே யோகியர். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ரஜ்ஜாவஹிரிவ சுக்தௌ ரஜதமிவ**
**த்வயி ஜக3ந்தி பா3ந்தி விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 42

கயிற்றில் பாம்பு தோன்றுவது போலும் கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது போலும் பரமனாகிய உன்னிடத்தில் உலகம் (தோற்ற மாத்திரமே) பிரகாசிக்கிறது. ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

குறிப்பு: - ஆதிசங்கரர் தான் ஸ்தாபித்த அத்வைத மதத்தை இங்கு உதாரணத்தோடு சுட்டிக்காட்டுகிறார். பிரம்மமே உண்மை, உலகம் பொய், என்னும் உண்மை இங்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

**லப்3த்4வா ப4வத்ப்ரஸாதா3ச்சக்ரம்**
**விது4ரவதி லோகமகி2லம் போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 43

உன் அருளினால் சக்கரம் பெற்று விஷ்ணு உலகத்தைக் காக்கிறான். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**வஸுதா4தத்3த4ரதச்ச2 யரத2 மௌர் -**
**வீசர பராக்ருதாஸுர போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 44

பூமியைத் தேராகவும், வாசுகியை நாணாகவும், விஷ்ணுவை அம்பாகவும் கொண்டு முப்புர அரக்கர்களை தோல்வியுறச் செய்த ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**குறிப்பு: -** யஜுர்வேதம் ஆறாவது காண்டத்தில் சொல்லப்பட்டுள்ள திரிபுர ஸம்ஹாரக் கதை இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

**சர்வ தே3வ ஸர்வோத்தம ஸர்வத3**
**து3ர்வ்ருத்த க3ர்வ ஹரண விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 45

சம்ஹராமூர்த்தியே! எல்லோரிலும் சிறந்த தெய்வமே, அனைத்தும் அளிப்போனே, நடத்தை கெட்டவர்களின் செருக்கை அடக்குபவருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! : சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ஷட்3ரிபுஷ்டு3ர்மிஷட்3விகார ஹர**
**ஸந்முக2 ஷண்முக2 ஜநக விபோ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 46

ஆறு பகைவர்களையும், ஆறு மாறுதல்களையும் ஆறு அலைகளையும் போக்கடிப்பவரும், சத்தியத்தை முன்னிட்ட முருகனுக்கு தகப்பனாருமான ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாய் இருக்கட்டும்.

**குறிப்பு: -** காமம், க்ரோதம், லோபம், மோஷம், மதம், மாத்ஸர்யம் என்பவை அறுபகைகள்; பிறத்தல், இருத்தல், வளர்த்தல், மாறுதல், தேர்தல், மறைதல் என்பவை ஆறு மாறுபாடுகள் - பசி, பிணி, முதுமை, சாவு, இன்பம், துன்பம் இவை ஆறு அலைகள்.

**ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்3ரஹ்மே (தி)**
**ஏதல்லக்ஷண லக்ஷித போ4**
**ஸாம்ப3 ஸதா3சிவ சம்போ4 சங்கர**
**சரணம் மே தவ சரணயுக3ம்** 47

உண்மை, அறிவு, முடிவற்றது பரம்பொருள் என்னும் (உபநிஷத) குறிப்பால் லக்ஷ்யமாகக் காட்டப்படும் பரம்பொருளே, ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

குறிப்பு: - பொய்யான, அறிவற்ற, அழிகின்ற உலகத்தினின்று வேறுபட்டது பரம்பொருள் என்பது இங்கே குறிப்பு.

**ஹாஹாஹூஹூ முக ஸுர கா$^{3}$யக**
**கீ$^{3}$தாபதா$^{3}$நபத்$^{3}$ய விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 48

ஹாஹா, ஹூஹூ என்ற கந்தர்வர்களின் தலைமையில் தேவப்பாடல்களோடு பாடப்பட்ட திருவடிகளையுடைய ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**ளாதி$^{3}$ர்ந ஹி ப்ரயோக$^{3}$ ஸ்தத$^{3}$ந்தம்**
**இஹ மங்க$^{3}$ளம் ஸதா$^{3}$ஸ்து விபோ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 49

'ள' என்ற எழுத்தை முதலாகக் கொண்ட சொற்பிரயோகம் இல்லை; அதை இறுதியில் கொண்ட மங்களம் கொண்டு உண்டாகட்டும். ஏ பரமேச்வரா! அம்பாளோடு கூடிய ஸாம்ப, ஸதாசிவனே! சம்புவே! சங்கரனே! உன் இரண்டு திருவடிகள் எனக்குப் புகலாக இருக்கட்டும்.

**க்ஷணமிவ தி$^{3}$வஸாந்நேஷ்யதி த்வத்பத$^{3}$**
**ஸேவாக்ஷணோத்ஸுக: சிவ போ$^{4}$**
**ஸாம்ப$^{3}$ ஸதா$^{3}$சிவ சம்போ$^{4}$ சங்கர**
**சரணம் மே தவ சரணயுக$^{3}$ம்** 50

உன் திருவடி சேவை செய்வதில் ஆவல் உள்ளவர்களுக்கு ஒவ்வொரு நாளும் ஒரு க்ஷணம் மாதிரியே கழிந்துவிடுகிறது. அம்பாளோடு கூடிய வரும், ஸாம்ப, ஸதாசிவரும், சம்புவும், சங்கரருமான ஏ பரமேச்வரா! உன் இரு பாதமே என் புகலிடம்.

